# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 5 | இதழ் 11 | ஜனவரி 10, 2018 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 5 | Issue 11 | January 10th, 2018 | Annual Subscription Rs. 100/-



## இறை ஞானமும் பிரம்ம ஞானமும்



# பகவத் பாதை தமிழ் மாத இதழ்

"தன்னை ஆன்மாவாகவும் பிரம்மமாகவும் சித்தாகவும் சத்தாகவும் அறிந்து தன்னுணர்வோடு நாம் இருப்போமானால் அதுதான் ஈஸ்வர ஞானமாகும். அது ஈஸ்வர ஞானமாக இருந்தாலும் அதுவும் ஒரு சிஜ்ஜட கிரந்தியே. வெளிப்பட்ட அனைத்தும் தோன்றி மறையும் இயல்பை கொண்டவையே. ஈஸ்வரனாகவே இருந்தாலும் அதனை பற்றி பிடிக்காது அதனை இயற்கையாக இயங்கி தோன்றி மறைய அனுமதிப்போமாயின் அது தான் பிரம்ம ஞானம் ஆகும்.

– ஸ்ரீ பகவத்

## கோடையில் இயற்கை சூழல் மிகுந்த ஏற்காடு மலைப் பிரதேசத்தில் 5 நாள்

# சிறப்பு ஞானமுகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

இடம் : House of Peace (Glass House) அமைதி இல்லம், ஏற்காடு.
நாள் : 1-5-2019 புதன்கிழமை மாலை 4 மணி முதல்
5-5-2019 ஞாயிறு மாலை 3.00 மணி வரை

### தலைப்புகள் :

1. ஞானப்புரிதல்
2. அகம்-புறம்
3. நான் யார்?
4. நினைவும் சிந்தித்தலும்
5. மனோலயம் - மனோ நாசம்
6. கர்மவினை
7. தெளிவில் உறுதி



- இது கோடை காலத்திற்கு ஏற்ற சுற்றுலா தலமாக அமைந்திருப்பதால் குடும்பத்துடன் பங்கு பெறலாம்.
- ஆண்களுக்கும், பெண்களுக்கும் தங்குவதற்கான தனித்தனி இடவசதி உள்ளது. ஒவ்வொருவருக்கும் தனித்தனி படுக்கை வசதி உள்ளது. தனி அறைகள் 10 மட்டும் உள்ளதால் குடும்பத்துடன் வருபவர்களுக்கு மட்டும் தனி அறை கொடுக்கப்படும்.
- உணவு மற்றும் தங்கும் இடவசதிக்கான செலவு பகிர்வு தலா ஒருவருக்கு ரூ. 6000/- மட்டுமே.
- 90 நபர்கள் மட்டுமே தங்க இடமிருப்பதால் பங்கேற்க விரும்புபவர்கள் மார்ச் 31ம் தேதிக்குள் முன்பதிவு செய்திட வேண்டுகிறோம்.

### முன்பதிவு செய்யும் வழிகள் :

**M.O, D.D. (or) Cheque :** வரைவோலை அனுப்புபவர்கள் : A/c. Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**Direct Payment :** நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் : Sri Bagavath Mission, HDFC A/c No. : 15907620000075 NEFT IFSC : HDFC 0001590 என்ற வங்கிக் கணக்கில் செலுத்தி தெரியப்படுத்தவும்.

**Online Payment :** Credit Card or Debit Card மூலம் www.sribagavathmission.org என்ற வெப்சைட்டிலும் முன்பதிவு செய்யலாம்.

**ஸ்ரீ பகவத் மிஷன்**
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3.
கைப்பேசி : **9994205880, 97891 65555**

## உள்ளே


| | |
|---|---|
| இறைஞானமும் பிரம்ம ஞானமும் | 3 |
| ஆசிரியர் பகுதி | 6 |
| மார்ச் மாத 4 நாள் ஞான முகாம் | 7 |
| கேள்வி பதில் | 8 |
| நிகழ்ச்சி நிழல்கள் | 10 |
| பாதையில் மலர்ந்த மலர்கள் | 11 |
| ஜென்கதை - இருப்பது ஒன்றே | 12 |


கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555

www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075





# இறை ஞானமும் பிரம்ம ஞானமும்

- ஸ்ரீ பகவத்

இறை ஞானம் என்றால் என்ன?

பிரம்ம ஞானம் என்றால் என்ன?

இறைவனை அறிவது இறைஞானம்; பிரம்மத்தை அறிவது பிரம்ம ஞானம்.

- இப்படி எடுத்துக் கொள்ளலாமா?

ஆன்மிக உலகில் இறை வழிபாடு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்படுகிறது.

இறைவனை வழிபட்டு இறைவனை அடைவதுதான் ஆன்மிக உலகின் இலக்காகக் கருதப்படுகிறது.

- இது சரி தானா?

இது சம்பந்தமாக வேத வேதாந்தங்கள் என்ன கூறுகின்றன?

ஆத்மாவும் அனாத்மாவும் சேர்ந்து ஜீவன் உருவாகிறான்.

அது போல் பிரம்மமும் மாயையும் சேர்ந்து ஈஸ்வரன் உருவாகிறான்.

அந்த ஈஸ்வரன் இந்த பிரபஞ்சத்தை உருவாக்கிப் பராமரிக்கிறான்.

ஜீவனுக்கு ஆதாரமாக ஆத்மா இருக்கிறது. அது போல் ஈஸ்வரனுக்கு ஆதாரமாக பிரம்மம் இருக்கிறது.

இந்த ஆன்மா வேறு, பிரம்மம் வேறா?

ஆன்மா வேறு, பிரம்மம் வேறல்ல; இரண்டும் ஒன்றே என்றுதான் வேதாந்தம் விளக்குகிறது.

ஆன்மா அல்லது பிரம்மம் என்பது உயிர் அம்சம்.

அனாத்மா அல்லது மாயை என்பது ஜட அம்சம்.

உயிர் அம்சமும் ஜட அம்சமும் கலந்த நிலையில்தான் உலகமும், உயிர்களும் உருவாகியுள்ளன.

இரவு நேரம், வீட்டில் மின் தடங்கல் ஏற்பட்டு விட்டது. வீட்டினுள் எதையும் பார்க்க முடியவில்லை. மெழுகுவர்த்தியை ஏற்றுகிறோம்.

மெழுகுவர்த்தி வெளிச்சத்தில் வீட்டிலிருக்கும் அனைத்துப் பொருட்களும் தெரிய ஆரம்பிக்கின்றன.

அந்தப் பொருட்களை அறிந்து கொள்ள மெழுகுவர்த்தியின் ஒளி தேவைப்படுகிறது.

அந்த மெழுகுவர்த்தியை நாம் பார்க்க வேண்டுமானால், அதைக் காட்டுவதற்கு இன்னுமொரு மெழுகுவர்த்தியைக் கொண்டு வரவேண்டுமா?

தேவையில்லை. மெழுகுவர்த்தி தன்னையும் காட்டிக் கொள்ளும். எல்லா பொருட்களையும் நமக்குக் காட்டும்.

இப்படிப் பிறவற்றின் உதவி இல்லாமல் எவையெல்லாம் தம்மைத் தாமே விளக்கிக் காட்டி சுய ஒளியோடு இருக்கின்றனவோ அவற்றைத்தான் உண்மை என்று கூறுகிறோம்.

- இருப்புத்தன்மை உடையவை என்று கூறுகிறோம்.

இப்படி சுய ஒளியோடு இருப்பவற்றை சாஸ்திரங்கள் "சித்" என்று கூறுகின்றன.

சித் என்றால் அறியும் தன்மை என்று பொருள்.

அறியும் தன்மையுடன் எது இருக்கின்றதோ அதுதான் உண்மையில் இருக்கிறது.

அப்படி அது இருப்புத் தன்மையுடன் இருப்பதால் அதனை "சத்" என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

அறியும் தன்மையாக இருக்கும் சித் மட்டும் உண்மையான சத் என்று அவை கூறுகின்றன.

இப்படி சுய ஒளியோடு இருப்பதை நாம் நமது சராசரி மொழியில் உணர்வு நிலை அல்லது Consciousness என்று கூறுக் கொள்ளலாம்.

இந்த உணர்வு நிலை எப்படி சுய ஒளியோடு இருக்கின்றது?

நாம் இருளில் நடந்து செல்லும் போது திடமான ஏதோ ஒரு பொருளின் மீது மோதிக் கொள்கிறோம்.

அடிபட்ட முன்னந்தலையில் வலி ஏற்படுகிறது. அந்த வலி இருப்பது இருட்டிலும் நமக்குத் தெரிகிறது.

இதை நாம் எப்படி அறிந்து கொண்டோம்?

அந்த வலியானது நமது உடல் உணர்வாக இருக்கிறது. அது நமது Bodily Consciousness ஆக இருக்கிறது. அதுவும் சுய ஒளியோடு இருந்து தனது

இருப்பு நிலையை விளக்கிக் காட்டுகிறது.

நாளை காலை பத்து மணிக்குள் நாம் நமது தொழில் சம்பந்தமாகப் பத்து லட்ச ரூபாய் செலுத்தியாக வேண்டும். செலுத்தாவிட்டால் பல லட்ச ரூபாய் நஷ்டமாகி விடும். நம்மிடம் பணம் இல்லை.

இரவில் விளக்கை அணைத்து விட்டு படுத்தாலும் வருத்தத்தில் நமக்குத் தூக்கம் வரவில்லை.

இருளான அந்த இரவிலும், நமக்கு ஏற்பட்ட மன வருத்ததை நம்மால் அறிய முடிகிறது.

நமது மன வருத்தமும் சுய ஒளியோடு இருந்து தன்னை விளக்கிக் காட்டிக் கொள்கிறது. இது மன உணர்வாக இருக்கிறது. Psychological Consciousness ஆக இருக்கிறது.

நாம் ஒரு பூங்காவில் அமர்ந்திருக்கிறோம். நமது கண்களின் முன்பு வானளாவிய பிரம்மாண்டமான மரம் ஒன்று இருக்கிறது. அந்த பிரம்மாண்டமான மரம் நிதர்சனமாக நமது கண்களுக்குத் தெரிகிறது.

அந்த மரம் உண்மையானதா? அல்லது பொய்யானதா?

அது உண்மையானதுதான். அதை நானும் எனது கண்களால் தெளிவாகப் பார்க்கிறேன். நீங்களும் உங்கள் கண்களால் தெளிவாகப் பார்க்கிறீர்கள். எவர் வேண்டுமானாலும் தங்கள் கண்களால் அந்த மரத்தைப் பார்த்து அதன் உண்மைத் தன்மையை உறுதி செய்து கொள்ளமுடியும்.

நமது கண்களுக்கு முன்னால் அந்த மரம் தெள்ளத் தெளிவாகக் காட்சி அளிக்கிறது. அதன் இருப்புத் தன்மையை விளக்கிக் காட்டுகிறது.

இதுதான் சுய ஒளியா?

இப்போது நாம் நமது கண்களை மூடிக் கொள்கிறோம்.

இந்நிலையில் அந்த பிரம்மாண்டமான மரம் நமக்குத் தெரியுமா?

அதுவும் மறைந்து விடும்.

நாம் நமது கண்களால் பார்த்தால் மட்டுந்தான் அந்த மரம் இருக்கிறது. இல்லாவிடில் அதுவும் இல்லாமல் போய் விடுகிறது.

அந்த மரத்தின் கிளையில் அமர்ந்து குயில் கூவுகிறது.

நமது காதுகளின் மூலம் அந்த ஒலியை மிகத் தெளிவாக நாம் கேட்கிறோம். அந்த ஒலி உண்மையாகவே இருக்கிறது.

நாம் காதுகளை மூடிக்கொண்டால் அந்த ஒலி இல்லாமற் போய்விடும்.

இந்த மரத்தையும் ஒலியையும் நம்மால் மறைத்து விட முடியும்.

இதுபோல் இடிப்பட்டதால் நமது முன்னந்தலையில் ஏற்பட்ட வலியையும் பணம் இல்லாததால் மனதில் ஏற்பட்ட வருத்ததையும் நம்மால் மறைக்க முடியுமா?

முடியாது.

இப்படி எவற்றாலும் தமது இருப்புத் தன்மை மறைக்க முடியாதபடி சுய ஒளியோடு எவை எவை உள்ளனவோ அவைதான் சித் அம்சத்தோடு உள்ளன.

அவைதான் உண்மையானவை.

நமது உடல் உணர்வுகளும், மன உணர்வுகளும் உண்மையானவை. இருப்புத் தன்மை உடையவை.

நித்தியமான வஸ்து எது, அநித்தியமான வஸ்து எது என்பதைப் புரிந்து கொள்வதுதான் ஞானம் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

இதுபோல் ஆன்மா என்பது எது, ஆன்மா அல்லாதது எது என்று பிரித்துப் புரிந்து கொள்வதுதான் ஞானம் என்றும் அவை கூறுகின்றன.

ஆன்மா அல்லாத அனாத்மா என்பது என்ன?

நாம் நமக்கு வெளியே பார்த்த பெரிய மரமானது, நாம் நமது கண்களை மூடிக் கொண்டதும் மறைந்து விடுகிறது.

ஆனால் நம் உடலிலும், மனதிலும் தோன்றிய உணர்ச்சிகளை நம்மால் மறைக்க முடியவில்லை.

உலகமும் உலகத்துப் பொருட்களுந்தான் அனாத்மாவா? அவைதான் உண்மையற்ற மாயையா?

அவற்றிலிருந்து வேறுபட்டதாகவும், எவற்றாலும் மறைக்க முடியாததாகவும், இருப்புத் தன்மை உடையதாகவும் உள்ள நமது உடல் உணர்வும் மன உணர்வுந்தான் உண்மைத் தன்மை உடையனவா?

அவைதான் ஆத்மாவா?

அவைதான் நித்திய வஸ்துவா?

சாஸ்திரங்கள் என்ன கூறுகின்றன?

கண்ணை மூடிக் கொண்டால் மறைந்துவிடும் மரத்தையும் மற்றும் உலகத்துப் பொருட்களையும்

அனாத்மா – அநித்தியம் என்று சாஸ்திரங்கள் கூறவில்லை.

மாறாக, உண்மைத் தன்மையும் இருப்புத் தன்மையும் உடைய நமது உடல் உணர்ச்சியையும், மன உணர்ச்சியையுந்தான்

அனாத்மா என்றும், அநித்தியம் என்றும் சாஸ்திரங்கள் கூறுகின்றன.

உண்மைத் தன்மையும் இருப்புத் தன்மையும் உடைய இவை எப்படிப் பொய்யாக இருக்க முடியும்? இவை எப்படி அனாத்மாவாக இருக்க முடியும்?

ஆனால் அவற்றைத்தான் அனாத்மா என்று சாஸ்திரங்கள் கூறி விடுகின்றன.

அப்படியானால் ஆத்மா என்றால் என்ன? நித்தியமானது என்பது என்ன? மெய்ப்பொருள் என்பது என்ன?

நமக்கு நிதர்சனமாகவே உண்மை என்று தெரியும் உடல் உணர்வையும், மன உணர்வையும் பொய்யானவை என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

அவையெல்லாம் பொய்யென்றால், எதுதான் உண்மை?

நாம் இனிப்பான ஓர் உணவைச்

சாப்பிடுகிறோம். நமது நாக்கு இனிப்பாக மாறி இனிப்பைக் காட்டுகிறது.

அதன் பிறகு கசப்பான ஒரு மருந்தைச் சாப்பிடுகிறோம். நமது நாக்கு கசப்பாக மாறி கசப்பைக் காட்டுகிறது.

ஒரே நாக்கு ஒரு சமயம் இனிப்பு உணர்வாக இருக்கிறது. அதுவே பிறகு கசப்பு உணர்வாக இருக்கிறது.

நாக்கினுடைய உண்மையான உணர்வு நிலை எது? இனிப்பா? அல்லது கசப்பா?

நமது நாக்குக்கென்று ஓர் உணருந்தன்மை இருக்கிறது. அந்த உணருந்தன்மைதான் இனிப்பாக மாறி இனிப்பைக் காட்டுகிறது. பிறகு கசப்பாக மாறி கசப்பைக் காட்டுகிறது.

அந்த உணருந்தன்மை இனிப்பாகவோ அல்லது கசப்பாகவோ மாறாவிட்டால் அது என்ன சுவையாக இருக்கும்?

அது எதையுமே காட்டாமல் அமைதியாகவே இருக்கும்.

அது எதையுமே காட்டவில்லை என்பதால் அந்த நாக்குக்கு உணருந்தன்மையே கிடையாது என்று கூற முடியுமா?

அது உணருந்தன்மையோடுதான் உள்ளது. ஆனால் இருப்பது தெரியாமல் இருந்து கொண்டிருக்கிறது.

இனிப்பு மற்றும் கசப்பு என்பது வெளிப்பட்ட சுவையுணர்வு.

நாக்கின் உணருந்தன்மை என்பது வெளிப்படாத சுவையுணர்வு. இதுதான் ஆதார சுவையணர்வு.

இப்படி நம்மிடம் வெளிப்படும் உடல் மற்றும் மன உணர்வுகளுக்கு ஆதாரமாக வெளிப்படாத ஓர் ஆதார உணர்வு உள்ளது.

வெளிப்பட்ட உணர்வை உணர்வு நிலை அல்லது Consciousness என்று கூறுகிறோம்.

வெளிப்படாத உணர்வை ஆதார உணர்வு அல்லது Awareness என்று கூறுகிறோம்.

இந்த ஆதார உணர்வுதான் உண்மைத் தன்மை உடையது. ஆனால் அது இருப்பது தெரியாமல் இருந்து கொண்டிருக்கிறது.

அதுதான் ஆன்மாவாகவும், பிரம்மமாகவும் இருக்கிறது.

சித்தாக இருக்கும் ஆன்மாவுடன் ஜடமாக இருக்கும் அனாத்மா கலந்திருக்கும் போது வெளிப்படுவதுதான் ஜீவன்.

அதுபோல் சித்தாக இருக்கும் பிரம்மத்துடன் ஜடமாக இருக்கும் மாயை கலந்திடும்போது வெளிப்படுவதுதான் ஈஸ்வரன்.

சித்தும் ஜடமும் கலந்து வெளிப்படுவதை சிஜ்ஜட கிரந்தி எனவும் அழைப்பதுண்டு. கிரந்தி என்றால் முடிச்சு என்று பொருள்.

சித்தாலும் ஜடத்தாலும் முடிந்து வைக்கப்பட்டதுதான் சிஜ்ஜட கிரந்தி.

ஜீவன் என்பதும், ஈஸ்வரன் என்பதும் சிஜ்ஜட கிரந்திகளே.

நமது உணர்வுகள் அனைத்துக்கும் மையமான உணர்வு என்பது

"நான்" என்னும் உணர்வே.

இந்த "நான்" என்பது எதனைக்குறிக்கிறது?

இந்த நான் என்பதை நமது இருப்புத்தன்மையாக உணர்கிறோம்.

இந்த நான் என்பது

சித்தாக உள்ளதா? அல்லது ஜடமாக உள்ளதா?

சித்திற்கு மட்டுமே இருப்புத்தன்மை உள்ளது.

நான் என்பது இருப்புத்தன்மை உடையதாக உள்ளது.

ஆகவே அது சித்தாக உள்ளது.

அதனால் **அஹம் பிரம்மாஸ்மி** என்று கூறுகிறோம்.

ஆனால் நான் என்னும் தன்னுணர்வாகவோ, பிரம்மமாகவோ எந்த நிலையில் நம்மை நாமே உணர்ந்தாலும் அது சிஜ்ஜட கிரந்தியே.

அறியுந்தன்மை தன்னை அறிவதில்லை.

அறியுந்தன்மையானது, தன்னை அறியும்போது அதுவும் சிஜ்ஜட கிரந்தியே.

வேறு எதுவாகவும் தன்னை அறியாமல் தன்னை மட்டும் தன்னுணர்வாக அறிவது என்பதுதான்.

ஈஸ்வர ஞானமாகும்.

தன்னை ஆன்மாவாகவும், பிரம்மமாகவும், சித்தாகவும், சத்தாகவும் அறிந்து தன்னுணர்வோடு நாம் இருப்போமானால்

அதுதான் ஈஸ்வர ஞானமாகும்.

அது ஈஸ்வர ஞானமாக இருந்தாலும்

அதுவும் ஒரு சிஜ்ஜட கிரந்தியே.

அதனால் அது ஒரு வெளிப்பட்ட உணர்வே.

வெளிப்பட்ட அனைத்தும் தோன்றி மறையும் இயல்பைக் கொண்டவையே.

ஈஸ்வரனாகவே இருந்தாலும் அதனைப் பற்றிப்பிடிக்காது,

அதனை இயற்கையாக இயங்கி, தோன்றி மறைய அனுமதிப்போமாயின்

அதுதான் முக்தியாகும்.

அதுதான் பிரம்மஞானமாகும்.

அதனால்தான் உண்மைநெறி விளக்கம் எனும் மெய்கண்ட சாத்திரம்,

"மண்முதல் சிவமது ஈறாம் வடிவு
காண்பது ரூபம்
மண் முதல் சிவமது ஈறாம் மலம்
சடம் என்றல் காட்சி
மண் முதல் சிவமது ஈறாம்
வகைதனில் தான் நிலாது
கண்ணுதல் அருளால் நீங்கல்
சுத்தியாய்க் கருதும் அன்றே."

என இதனையே விவரிக்கிறது.



# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

பகவத் பாதையில் பயணிக்கும் அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்.

அனைவருக்கும் ஆங்கில புத்தாண்டு நல்வாழ்த்துகளையும் பொங்கல் நல்வாழ்த்துகளையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

ஞான சிந்தனையைத் தூண்டும் அய்யாவின் கருத்துகள் அடங்கிய 2019ம் வருடத்திற்கான வண்ணக் காலண்டரை ஜனவரி 1 ஆம் தேதி ஸ்ரீபகவத் பவனில் வெளியிட்டுள்ளோம். இதன் **விலை ரூ.100/-** தேவையானவர்கள் வாங்கி பயன்பெறலாம். உங்களது நண்பர்களுக்கும் பரிசளிக்கலாம்.

மேலும் டிசம்பர் மாதம் 22ம் தேதி முதல் 25ம் தேதி வரை ஒரு ஞான முகாமும் டிசம்பர் 31 ஆம் தேதி மற்றும் ஜனவரி 1ம் தேதி ஆகிய இரண்டு நாட்களும் ஞான உறுதி முகாமும் சிறப்பாக நடைபெற்றன. இதற்கிடையில் ஏற்காட்டில் நடைபெற்ற அக்கு ஹீலர் அ. உமர்பாரூக் அவர்களின் அல்ட்ரா மைண்ட் என்ற அக்கு ஹீலர்களுக்கான மூன்றுநாள் நிகழ்ச்சியில் டிசம்பர் 29 ஆம் தேதி சனிக்கிழமை காலை ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் சிறப்புரை வழங்கினார்கள்.

ஹீலர் பாஸ்கர் அவர்களின் மூன்று நாள் வகுப்பு ஸ்ரீ பகவத் பவனில் 28 ஆம் தேதி முதல் 30 ஆம் தேதி வரை நடைபெற்றது. இதில் 30 ஆம் தேதி காலை ஸ்ரீ பகவத் ஐயா சிறப்புரை வழங்கினார்கள். இதனைத் தொடர்ந்து ஜனவரி 24ம் தேதி முதல் 27ம் தேதி வரை ஆங்கிலத்தில் ஒரு ஞான முகாம் நடைபெற உள்ளது. இதில் நீங்கள் கலந்து கொண்டு பயன்பெறுவதோடு இந்த வாய்ப்பினை உங்கள் நண்பர்களுக்கும் தெரியப்படுத்த வேண்டுகிறோம்.

மேலும் சென்ற மாத இதழில் **பயங்கரவாதம் தேவையா?, கவலைகள் அனைத்திற்கும் தீர்வு** மற்றும் **ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்** ஆகிய நூல்களை அச்சிடுவதற்கு நிதிப்பற்றாக்குறை இருந்ததால் வாய்ப்புள்ளவர்கள் நன்கொடை வழங்குமாறு வேண்டுகோள் விடுத்திருந்தோம்.

நமது வேண்டுகோளை ஏற்று நன்கொடைகளை வழங்கிய நல் உள்ளங்கள் :

திரு. **சங்கரநாராயணன்**-கும்பகோணம்,
திருமதி **அனிதா கருணாகரன்,**
திரு. **ஜெயராம்** - கனடா,
திரு. **விஷ்ணுகுமார்** - பெங்களூர்,
திரு. **R. கார்த்திகேயன்** - விஜயமங்கலம்,
திரு. **கோபிநாத்** - திருப்பூர்,
திருமதி **மேனகா சிவக்குமார்** -ஈரோடு,
திரு **மயில்வாகனம்** - மதுரை,
திரு. **A. குமார்** - காட்பாடி,
திருமதி **சிவகாமி** - தஞ்சாவூர்,
திரு. **குணாளன்** - கோவை,
திரு. **P. திருமூர்த்தி** - ஈரோடு,
திரு. **ராஜேஷ்** - சேலம்,
திரு. **ஜெய் @ சத்தியசாய் அரங்கநாத்,** ஆஸ்திரேலியா
திருமதி **உமா** - தேனி,
திரு. **ராஜசேகர்** - பெங்களூர்,
மலேசியா **தேவி**
திரு. **M.S. முருகவேல்** - சென்னை,
திரு. **இரத்தினசாமி** - திருப்பூர்,
திரு. **M. சங்கர்** - மேட்டூர்.
திரு. **J. சுவாமிநாதன்** - பெங்களூர்
திரு. **இராஜேஸ் சுப்ரமணியம்** மெல்போர்ன்
திருமதி. **விஜயலட்சுமி** - சென்னை.
ஹீலர் **தேவராஜன்** - சேலம்
திரு. **சண்முகசுந்தரம்** - புதுக்கோட்டை

இவர்கள் அனைவருக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். தற்போது கைவசம் உள்ள நிதிக்கு தகுந்தார்போல் பயங்கரவாதம் தேவையா? மற்றும் கவலைகள் அனைத்திற்கும் தீர்வு ஆகிய நூல்கள் மட்டும் மேலும் சில அத்தியாயங்களை இணைத்து புதிய பொலிவுடன் பிரசுரித்துள்ளோம். இனி புதிதாக பிரசுரிக்க வேண்டிய நூல்களுக்கு நன்கொடைகளை எதிர்பாராமல், நூல் விற்பனையில் வரும் வருவாயைக் கொண்டு அச்சிடவும் முடிவு செய்துள்ளோம். எனவே இதுவரை நன்கொடை விலையில் (Gift Price) விற்பனை செய்து வந்த நூல்களையும் வர்த்தக விலைக்கு மாற்றியுள்ளோம். மனித குலத்தையே துன்பத்திலிருந்தும் துயரத்திலிருந்தும் விடுவிக்கும் இந்த நூல்களை வர்த்தக விலையில் தாங்கள் வாங்கி பயன் பெறுவதுடன் மற்றவர்களுக்கும் பரிந்துரைப்பதன் மூலம் ஸ்ரீ பகவத் மிஷனின் நிர்வாக செலவுகளில் பங்கெடுத்துக் கொள்வதோடு அய்யாவின் ஞானக் கருத்துகளை அனைவருக்கும் எடுத்துச் செல்லும் ஸ்ரீபகவத் மிஷனின் தொண்டிலும் பங்கு பெறுவதாக அமைந்துவிடும்.

நன்றியுடன்
**ஸ்ரீ பகவம் மிஷன்,** சேலம்.

## வேண்டுகோள்

ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் ஐயா வின் மிக முக்கியமான நூல்களான **1. கவலைகள் அனைத்திற்கும் தீர்வு. 2. பயங்கரவாதம் தேவையா? 3. ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்** ஆகிய நூல்கள் தீர்ந்துவிட்டன. மீண்டும் புதிய பொலிவுடன் மேலும் சில அத்தியாயங்களை இணைத்து வெளியிட உள்ளோம். ஆனால் அச்சிடுவதற்கு தேவையான பணம் இல்லாததால் தாமதமாகிக்கொண்டு வருகிறது. வாய்ப்புள்ள அன்பர்கள் நன்கொடை வழங்கி உதவினால் ஐயாவின் கருத்தை அனைவருக்கும் எடுத்துச் செல்ல பேருதவியாக இருக்கும்.

வாய்ப்புள்ள அன்பர்கள் தங்களால் இயன்ற தொகையை கீழ்க்கண்ட கணக்கு எண்ணில் செலுத்தி உதவுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

**HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem.**

அன்புடன் **ஸ்ரீ பகவத் மிஷன்**

# ஸ்ரீ பகவத் பவனில் மார்ச் மாதத்தில் 4 நாள் ஞான முகாம்

இடம் : **ஸ்ரீ பகவத் பவன்,** ஜருகு மலை அடிவாரம்,
கொடம்பக்காடு, பெரிய கவுண்டாபுரம், காரிப்பட்டி (Po.) சேலம் - 636 106.

செலவு பகிர்வு
ரூ. **4000/-** நபர் ஒருவருக்கு

நாள் : **7.3.2019** மதியம் 1.00 மணி முதல்
**10.3.2018** மதியம் 3.00 மணிவரை

குறிப்பு: **7.3.2019** மாலை 6.00 மணிக்கு முக்கியமான வகுப்பு தொடங்கிவிடும். இந்த உரையைத் தொடக்க முதல் கேட்பதே உங்களுக்கு தெளிவைக் கொடுக்கும்.

செலவு பகிர்வுக் கட்டணத்தை வழங்க இயலாதவர்கள் தனிப்பட்ட முறையில் விண்ணப்பிக்கலாம்.
அனைவரும் வருக! ஞானத் தெளிவு பெறுக...

- ஆண்கள் மற்றும் பெண்கள் தங்குவதற்கென தனித்தனி இடவசதி உள்ளன.
- ஞான முகாமில் 50 அன்பர்கள் மட்டுமே கலந்துகொள்ள இடமிருப்பதால் முன்பதிவு அவசியம்.

உங்கள் வருகையை முன் அறிவிப்பு செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

## முன்பதிவு செய்யும் வழிகள்

| | | |
|---|---|---|
| M.O, D.D. (or) Cheque | : | வரைவோலை அனுப்புபவர்கள் A/c Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம். |
| Direct Payment | : | நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் கீழ்க்கண்ட வங்கிக் கணக்கில் செலுத்தலாம். **HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem** |

**ஸ்ரீ பகவத் மிஷன்,** 31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3. கைப்பேசி : 9994205880, 97891 65555

ஞான ஒலி
ஆன்லைன் ரேடியோ
ஆண்ட்ராய்டு செயலி வெளியீட்டு விழா

24 மணி நேர
ஒலிபரப்பு

Google play

Scan to download



**ஞான ஒலி ஆன்லைன் ரேடியோ ஆண்ட்ராய்டு செயலியை பதிவிறக்கம் செய்ய**

https://bit.ly/2AktX6W லிங்கை கிளிக் செய்யவும் (அ) "Gnana Oli" என்று கூகிள் Play Store-ல் (Search) தேடவும் (அ) QR Code Scan செய்யவும்.

# Special Satsang / Retreat in English

By **Sri Bagavath**

**At His Residence / Ashram Jarugu Hills, Salem (Around 140 Kms. from Thiruvannamalai)**



**Topics**

- Enlightenment
- Liberation
- Who am I?
- Yogic Powers and Experiences
- Manolaya and Manonasa
- Psychological Action and Physical Action
- Karma and Action of God
- Confirmation on Enlightenment

2019 January 24th to 27th

Daily
Morning : 10.00 a.m. to 01.00 p.m.
Evening : 06.00 p.m. to 08.00 p.m.

You may arrive on 23rd itself No Fee for Satsang You may Donate for Stay and Food

**For Address Click:**
Baghavat Bhavan in Google Map

**For Information:**
E-mail: sribagavathji@gmail.com

Mobile: 9789165555, 9994205880, 7010691267, 9944215677



**V.A.P. சரவணன்,** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி ? பதில்...

எதிர்பாராமல் நிகழ்ந்த எனது ஒரே மகனின் இறப்பினால் ஏற்பட்ட மனவேதனைக்கு தீர்வு உண்டா?

**கேள்வி :** நான் ஓர் ஆன்மிக அமைப்பில், பட்டதாரி அளவிற்கு படித்த பெண்மணி. என்னுடைய 23 வயதான ஒரே மகன் முற்றிலும் எதிர்பாராத விதமாக காய்ச்சல் ஏற்பட்டு வலிப்பு வந்து Hospital செல்வதற்கு முன்பாகவே இறந்துவிட்டான். நான்கு மாதம் முடிந்த நிலையிலும் என்னால் அந்த பாதிப்பிலிருந்து வெளியேற முடியவில்லை. நான் அவ்வளவு மோகசமான கர்மாவை செய்தவளா? எனது மகனின் கர்மா அப்படி மோசமாக அமைந்துள்ளதா? அவன் இறக்கும் தருவாயில் என்னிடம் ஏதாவது பேசி இருந்தாலும் என் மனம் ஏதோ ஒரு வகையில் சற்று அமைதி பெற்றிருக்கும். கடைசி நேரத்தில் என்னிடம் எதையும் சொல்லாமலேயே அவன் மரணம் நிகழ்ந்துவிட்டது. அது என் மனதை மிகவும் பாதிக்கிறது. ஏதோ ஒரு வகையில் அவனிடம் பேச வேண்டும் என்று என் மனம் ஏங்கித் தவிக்கிறது. ஆவியுடன் பேசும் யாருடனாவது சேர்ந்து என் மகனிடம் பேசிவிடலாம் என்று நினைக்கிறேன். கணவர் மற்றும் என் பெற்றோர் "இந்த சம்பவத்தில் இருந்து வெளியே வா" என்று கூறுகிறார்கள். என்னால்தான் வெளியே வர முடியவில்லை. அவனது ஆன்மா சாந்தி அடைந்திருக்குமா? அவன் எப்படி இருப்பான்? என்று என் மனம் எண்ணித் தவித்துக் கொண்டே இருக்கிறது. மேலும் நான் Youtube-ல் அம்மாவின் உயர்வை பற்றிய வீடியோக்களை பார்க்க நேரும்போதெல்லாம் நான் "அப்படிபட்ட அம்மாவாக இல்லாமல் இருந்து விட்டேன்" என்று தோன்றுகிறது. மேலும் அவன் மீது அதிக பாசம் இருந்தபோதும் அவன் நல்வாழ்வுக்காக கண்டிப்புடன் வளர்த்து விட்டேன். இதனால் அவனது மரணத்திற்கு நானே காரணமாகி விட்டேனே என்ற குற்ற உணர்ச்சி என்னை வாட்டி வதைக்கிறது. நான் எதற்காக வாழ வேண்டும் என்று தோன்றுகிறது. மிகவும் விரக்தியாக உள்ளது. என்னால் கொஞ்சம் கூட மனம் ஒன்றி மகனின் ஆத்மா சாந்தியடைய ஆத்ம சாந்தி தவம் கூட செய்ய முடியவில்லை. அவனது ஆத்மா சாந்தி அடைய நான் என்ன செய்ய வேண்டும்? அவனை சரியாக வளர்ப்பதற்கும், படிப்பதற்கும், பொறுப்பாக வேலைக்குச் செல்வதற்கும் நான் கண்டிப்புடன் நடந்து கொண்டதெல்லாம் ஒன்று சேர்ந்து "நான்தான் அவனது மரணத்திற்கு காரணமாக அமைந்து விட்டேன்" என்று எண்ணத் தோன்றுகிறது. தூங்கியே நான்கு மாதங்கள் ஆகின்றன. இந்த சம்பவத்தில் இருந்து வெளியே வர, எனக்கு உதவுங்கள்.

**பதில் :** இந்தப் பெண்மணிக்கு கீழ்க்கண்டவாறு பதிலளிக்கப்பட்டது.

"நடப்பவை அனைத்தும் நம்முடைய கர்மாவின்படியே நடந்து முடிகிறது. நடந்து முடிந்த நிகழ்வை நாம் புரிந்து கொண்டு, மேற்கொண்டு அதற்கான சரியான செயலை செய்து வாழ்வதற்குத்தான் ஆன்மிகம் தேவைப்படுகிறது...

"முற்றிலும் எதிர்பாராமல் ஏற்பட்ட உங்கள் மகனின் இறப்பு, யாருக்கு ஏற்பட்டிருந்தாலும் அவர்களும் இதேபோன்ற பாதிப்பைதான் அடைவார்கள். இது நமக்கு ஏற்படும் மிகப் பெரிய பாதிப்பு என்பதால், நம் மனம் சமநிலை அடைவதற்கு சற்று காலம் தேவைப்படும். இப்படி பாதிப்பு ஏற்படுவது இயகையான ஒன்று தான்...

"உங்கள் மகனை சரியாக வளர்க்க வேண்டும் என்றும், கல்வி கற்க வேண்டும், தொழிலில் ஈடுபட வேண்டும் என்பதற்காகவும் நீங்கள் அவனிடம் கண்டிப்புடன் நடந்து கொண்டவையெல்லாம் ஒன்று சேர்ந்துகொண்டு அவனது மரணத்திற்கு நீங்கள்தான் காரணம் என்று உங்களுக்குள் குற்ற உணர்ச்சியை ஏற்படுத்தியுள்ளது...

"நீங்கள் அவன் செய்யும் தவறுகளையெல்லாம் கண்டு கொள்ளாமல், எப்படியோ இருந்து விட்டுப் போகட்டும் என்று விட்டிருந்தால் அவன் ஊதாரியாக சமூகத்தில் வெறுக்க கூடிய நபராகத்தான இருந்து இருப்பான். நீங்கள் கண்டிப்புடன் நடந்து கொண்டதுதான் அவனது மரணத்திற்கு காரணம் என்று எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள். உண்மையில் அவனது மரணத்திற்கு அவனது கர்மாவே காரணம். இதை சரியாக புரிந்துகொள்ளாமல், நீங்கள் அவனை கொன்று விட்டதாக எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள். ஒரு மகனின் நல் வாழ்க்கைக்காக ஒரு தாய் கண்டிப்புடன் அவனது தவறுகளை சுட்டிக் காட்டுவது தவறா? அவன் செய்யும் தவறுகள் எதையும் கண்டு கொள்ளாமல் அப்படியே விட்டுவிட வேண்டுமா? இப்படி

வளர்ப்பது தான் சரியான அணுகுமுறையா? இப்படி வளர்த்தால் அவனுக்கு நல்வாழ்க்கை அமைத்துக் கொடுக்க முடியுமா? இப்படி நடந்து கொண்டால் உங்கள் கடமையை நீங்கள் சரியாக செய்ததற்கான மனநிறைவு ஏற்படுமா?" என பல கேள்விகளை கேட்டு அந்தப் பெண்மணியை சற்று நிதானமாக யோசித்துப் பார்க்கும்படி கூறினேன்.

மேலும் "உடல் தோன்றுவதற்கு மட்டுமே பெற்றோர் காரணம். சூக்கும சரீரம் என்பது முழுக்க முழுக்க இறந்தவரின் முந்தைய கர்மாவின் தொடர்ச்சியே இந்த பிறவியாகும்...

"அடுத்த பிறவி எடுக்கும் வரை இறந்தவரின் சூக்கும சரீரம் தொடர்பு கொண்ட இடங்களில் தான் இருக்கும். உடலுடன் சூக்கும சரீரம் இணைந்து இருக்கிறபோது மட்டும்தான் ஒவ்வொரு அனுபவத்தையும் உணரமுடியும். உடலும் சூக்கும சரீரமும் பிரிந்த நிலையில் உடல் ஐந்து பூதங்களாக மாற்றம் அடைந்துவிடும். சூக்கும சரீரத்திற்கு உடல் இல்லாததால் எந்த அனுபவத்தையும் உணர முடியாது. எந்த உணர்வையும் வெளிக்காட்டிக் கொள்ளவும் முடியாது. உடல், மனம் என்ற கூட்டுடன் இருந்து செயல்பட்டு வந்தால்தான் எந்த உணர்வையும் உணர முடியும். இறந்த பிறகு உடல் பஞ்ச பூதங்களுடன் சேர்ந்துவிடுகிறது. நமது காரண சரீரமே அடுத்து பிறவி எடுக்கும் வரை உடலுக்காக காத்திருக்கிறது. இறந்தவருக்காக செய்யப்படும் ஆத்ம சாந்தி தவம், பிராமணர்களால் செய்யப்படும் தர்ப்பணங்கள், சடங்குகள் என அனைத்துமே நம் மன திருப்திக்காக மட்டுமே. மனோவிடுதலை ஏற்பட்டால் மட்டுமே மனோ ரீதியான பந்தங்களிலிருந்து விடுபட்டு, மனம் தன்னுடைய மூல நிலையான பிரம்ம நிலையை அடைகிறது. அதற்காகத்தான் ஞானம் பெற வேண்டும் என்பதை மிக உயர்ந்த உன்னத விஷயமாக ஆன்மிகம் என்ற பெயரில் நமது பெரியோர்கள் வழங்கினார்கள்" என்று கூறிவிட்டு பகவத் ஐயாவின் நூல்களான "சிந்தனையும் சிந்திப்பும், சும்மா இரு, நான் யார், ஆகாமிய கர்மா, தியானத்தை விடு,! ஞானத்தைப் பெறு! போன்ற நூல்கலை அனுப்பி படிக்கச் சொன்னேன்.

அந்த பெண்மணி "எனது மகனுக்கு நான் படும் வேதனை தெரியுமா?" என்று கேட்டார். "தெரியும்" என்று கூறினேன். பகவத் ஐயாவின் கருத்துக்களை நேரம் கிடைக்கும்போதெல்லாம் Youtube வழியாக கேளுங்கள்" என்று கூறினேன்.

கொஞ்ச நாட்கள் கழித்து அந்தப் பெண்மணி என்னை போனில் தொடர்பு கொண்டு தான் உணர்ந்ததை பின்வருமாறு கூறினார்.

"அய்யாவின் கருத்துகளையெல்லாம் கேட்டு கொஞ்சம் மனம் அமைதி அடைந்திருக்கிறது. இன்று காலை 5 மணிக்கு மகனைப் பற்றிய நினைவு வந்தது. அவனுடைய படத்திற்கு முன்பாக போய் நின்று, நான் உன்னை பற்றி நினைத்துக் கொண்டிருப்பது உனக்கும் தெரிகிறதா? என கண்ணீர் மல்க கேட்டேன். அப்போது எனது மொபைல் போனில் ஒரு மெசேஜ் சத்தம் கேட்டது. Youtube ஐ ஆன் செய்தேன். எனக்கும் எனது மகனுக்கும் பிடித்த இளையராஜா பாடலான ஒரு பாடல் "ஒரு ஜீவன் அழைத்தது, ஒரு ஜீவன் துடித்தது, இனி எனக்காக அழ வேண்டாம், இங்கு கண்ணீரும் விழவேண்டாம், உன்னையே எண்ணியே வாழ்கிறேன் என்ற பாடல் ஒலித்தது" என்றார்.

மேலும் "இந்த பாடலை கேட்டவுடன் எனது மகன், அவன் பிரிவால் நான் படும் வேதனையை உணர்ந்ததாக உணர்ந்தேன். என்னால் கட்டுப்படுத்த முடியாமல், மனதில் இருந்த ஒட்டுமொத்த சோகமும் ஒன்றிணைந்து கண்ணீர் பெருக்கெடுத்து தேம்பித் தேம்பி உடைந்து அழுதேன். அதன் பிறகு கனத்த மனம் லேசானது. இதை மற்றவர்கள் எப்படி புரிந்து கொள்கிறார்களோ எனக்கு தெரியாது. ஆனால் நான் உணர்ந்தது உண்மை" என்று தனக்கு நேர்ந்த அனுபவத்தை, கூறி தான் இப்பொழுது அந்த பழைய பாதித்த சம்பவத்தில் இருந்து முழுமையாக வெளியேறி விட்டதாக கூறினார்.

குற்ற உணர்ச்சியின் கோரப்பிடியில் சிக்கித் தவித்த இந்த பெண்மணிக்கு இங்கு என்ன நிகழ்ந்துள்ளது? எப்படி அவர் மனக்கவலையில் இருந்து விடுபட்டார்?

ஒரு மாட்டு வண்டியின் இயக்கத்தின் ஆதாரம் அந்த வண்டிச்சக்கரத்தில் இருக்கும் அச்சாணியே. அது போல் **நம் மன பிரச்சினையின் ஆணிவேர் நமது குற்றவுணர்ச்சியே.** வண்டியின் அச்சாணியை உருவிவிட்டால் எப்படி வண்டியின் இயக்கம் நின்று போய்விடுமோ, அதுபோல் நம் மனதில் இருக்கும் குற்ற உணர்ச்சியை எதிர் கொள்ளத் தெரிந்து கொண்டால் மனப்பிரச்சினை அனைத்தும் தாமாக ஓடி மறைந்துவிடும். அந்தப் பெண்மணி தனக்கு ஏற்படும் குற்ற உணர்ச்சியும் ஒரு எண்ணமே என்பதை புரிந்து கொண்டார். எல்லா எண்ணமும் தாமாக வந்து மறையக் கூடியது என்பதைப் போலவே குற்ற உணர்ச்சியும் தோன்றி மறைவதாக எடுத்துக் கொண்டு விடுதலை அடைந்தார்.

**"குற்ற உணர்ச்சியும் எண்ணமே என்பதை புரிந்து கொண்டால், அதனை நிர்வகிக்கும் பொறுப்பில் இருந்தும் விடுபட்டு விடுதலையை அடைந்து விடுவோம்."**

# நிகழ்ச்சி நிழல்கள்



ஏற்காட்டில் அக்கு ஹீலர்களுக்கான ஆல்ட்ராமைண்ட்பயிற்சியில் பகவத் ஐயா அவர்களுடன்...



ஸ்ரீபகவத் ஐயாவுடன்
ஹீலர் பாஸ்கர் அவர்கள்



2019 ஆம் ஆண்டின் புதிய காலேண்டர் வெளியீடு.



ஞான உறுதி முகாமில் கலந்து கொண்டுடவர்களுடன் ஸ்ரீபகவத் ஐயா



பயங்கரவாதம் தேவையா?
நூல் வெளியீட்டின் போது...



சேலம் ஸ்ரீபகவத் பவனில் 22.12.2018 முதல் 25.12.2018 வரை
நடைபெற்ற ஞான முகாமில் கலந்து கொண்டவர்களுடன் ஸ்ரீபகவத் ஐயா

பாதையில் மலர்ந்த மலர்கள்

# "துறவறத்திலிருந்து இல்லறம்"

அன்புடையீர் வணக்கம்.

என் பெயர் K. திருஞானம். நான் கடந்த 30 வருட காலமாக ஆன்மிகத் தேடலில் ஈடுபட்டு திருவண்ணாமலையிலிருந்து இமயமலை வரை சுற்றித்திரிந்து எத்தனையோ பெரிய பெரிய ஆன்மிக குருமார்களிடம் சென்று ஆன்மிக பயிற்சி பெற்றேன். அதற்காக என்னுடைய அம்மா, அப்பா 40 வருடகாலமாக சேர்த்து வைத்திருந்த சொத்து, பணம் எல்லாவற்றையும் காலி செய்துவிட்டு எனது அம்மாவை வீடுகூட இல்லாமல் ரோட்டோரமாக திறந்த வெளியில் சமைத்து சாப்பிடும் நிலைக்கு கொண்டு வந்து விட்டேன். எனது மனைவியும் என்னிடம் பணம் இல்லாத ஒரே காரணத்தற்காக என்னை பத்து வருடத்திற்கு முன்பே வீட்டை விட்டு துரத்தி அடித்து விட்டார்கள். அதன் பிறகு திருவண்ணாமலையில் சாமியார் வேஷம் போட்டுக் கொண்டு பிச்சை எடுத்து சாப்பிட்டுக் கொண்டு காலத்தை ஓட்டி வந்தேன். இந்த நிலையில்தான் எனது நண்பர் முருகன் அவர்கள் எனக்கு ஆறுதல் அளித்து எனக்க தேவையான பணத்தை கொடுத்து சென்னை வேப்பம்பட்டுக்கு அழைத்து வந்து **விவேகானந்தா ஆரோக்கிய சமூக நல அறக்கட்டளையில்** சேர்த்துக் கொண்டு என்னை காப்பாற்றி வந்தார். இந்த நிலையில்தான் பெங்களூரில் உள்ள எனது சகோதரி மஞ்சுளா அவர்கள் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் எழுதிய **ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்** என்னும் புத்தகத்தை என்னிடம் கொடுத்து படிக்கச் சொன்னார்கள். 200 வது பக்கத்தில் இயலாமையை உணர்வதே ஞானம் என்னும் தலைப்பை 211 ஆவது பக்கம் வரை படித்தேன். அப்பொழுதே எனக்குள்ளே மாற்றங்கள் ஏற்பட தொடங்கிவிட்டன. அதன்பிறகு செப்டம்பர் 2ம் தேதி 2018 ல் சென்னை காமராஜர் அரங்கில் நடைபெற்ற ஒருநாள் சிறப்பு ஞான முகாமில் கலந்து கொண்டேன். ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் மேடையில் தோன்றி பேச ஆரம்பித்தார்கள். அவரைப் பார்த்ததுமே உள்ளுக்குள்ளே மாற்றம் ஏற்பட ஆரம்பித்து அவர் பேச்சைக் கேட்டதும் மேலும் மேலும் மாற்றங்கள் ஏற்பட்டுக் கொண்டே இருந்தது. எனக்குள்ளே ஏதேதோ நடந்து கரைந்து கரைந்து கண்ணீர் பெருகி நான் என்பதே இல்லாமல் இருப்பதை அங்கு உணர்ந்தேன். ஐயாவை நேரில் சந்தித்தே ஆக வேண்டும் என்கிற ஏக்கம் ஏற்பட்டு சேலம் சென்று ஜருகுமலை அடிவாரத்தில் அமைந்துள்ள ஸ்ரீ பகவத் பவனில் ஐயாவை சந்தித்து அவருடன் இரண்டு நாள் தங்கி விட்டு வந்த பிறகு ஒரு வாரத்திற்குள்ளேயே என்னை வெறுத்து பத்து வருடமாக ஒதுக்கி வைத்திருந்த என் மனைவி வீட்டிலிருந்து என்னிடம் போன் மூலமாக தொடர்பு கொண்டு மன்னிப்பு கேட்டு "சேர்ந்து வாழ்கிறேன்" என்று கூறி "என்னுடன் வாழ்வதையே பெரும் பாக்கியமாக கருதுகிறேன்" என்றும் கூறினார்கள். இதை கேட்ட பிறகு எனக்கு இல்லறமா? துறவறமா? எதைத் தேர்ந்தெடுப்பது என்கிற குழப்பம் ஏற்பட்டு விட்டது. இதில் எதை தேர்ந்தெடுப்பது என்று ஸ்ரீ பகவத் ஐயாவிடம் கேட்டேன். அவர் "இல்லறமே ஏற்றுக்கொண்டு நலமுடன் வாழுங்கள்" என்று கூறினார்கள். உடனே எனது மனைவி வீட்டிற்கு சென்று நானும் மன்னிப்பு கேட்டு மனம் விட்டுப் பேசினேன். எங்களுக்குள்ளே மகிழ்ச்சியான இல்லறம் ஆரம்பமாகிவிட்டது. எனது அனுபவத்திற்கு ஏற்றபடி நல்ல தொழிலும் அமைத்து தருவதாக மனைவி வீட்டாரும் சந்தோஷமாக கூறினார்கள். அய்யா அவர்கள் எந்த மந்திரம், தந்திரம், யோகப்பயிற்சி, தியானப்பயிற்சி என்று எதுவுமே எனக்கு கொடுக்கவில்லை. அப்படி இருக்க எனக்கு எப்படி இல்லறம் நல்லறமாக அமைந்து ஆன்மிகத்தில் வெற்றியும் கிடைத்தது என்பது எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது. நான் கனவிலும் நினைத்து பார்க்கவில்லை. நல்லதொரு இல்லறம் அமையும் என்றும் நல்ல தொழில் அமையும் என்றும். மேலும் ஒருமெய்ஞானியை கண்டுபிடிக்க நான் முப்பது வருடகாலமாக அலைந்து திரிந்து தேடியிருக்கிறேன். சொத்து சுகங்களை எல்லாம் இழந்து நடுத்தெருவுக்கு வந்து பிச்சை எடுத்து சாப்பிட்டு, பிறகு எதையுமே செய்யலாமல் மூன்றாண்டுகள் சும்மாவே இருந்த பிறகுதான் எனக்கு மெய்ஞானி பகவத் ஐயா அவர்களின் தொடர்பு ஏற்பட்டது.

இதை படிக்கும் அன்பு சகோதரர்கள் என்னை போல் கஷ்டப்படக்கூடாது என்கிற ஆதங்கத்தில் தான் மனதில் பட்டதை மறைக்காமல் அப்படியே இதை எழுதி தெரியப்படுத்துகிறேன். நிறைகுடம் தழும்பாது என்பதற்கு சரியான உதாரணமாக ஸ்ரீபகவத் ஐயா அவர்கள் திகழ்கின்றார்கள். முப்பது வருடம் போராட்டத்திற்கு பிறகு, வாழும் ஞானி ஸ்ரீ பகவத் ஐயா அவர்களை சந்தித்து, தெளிவடைந்து. நான் வெற்றி பெற்று வாழ்க்கை வாழ்வதை நினைத்தால், எனது மனதிலே ஆயிரம் ஆண்டுகாலம் சுகமான வாழ்க்கையை வாழ்ந்த திருப்தியும் சந்தோஷமும் ஏற்பட்டிருக்கிறது. ஐயா அவர்களை பாராட்ட நினைத்தாலும் மனம் கரைந்து வார்த்தைகளே வராமல் காணாமல் போய்விடுகிறது. "**எதையுமே மனதில் பிடித்து வைக்காதே**" என்று அவர் கூறியது எனக்குள் எப்போதும் நடந்து கொண்டிருக்கிறது. எந்தவிதமான பிரதிபலனையும் எதிர்பார்க்காமல் செயல்பட்டுக் கொண்டிருக்கும் ஸ்ரீ பகவத் மிஷனுக்கு நன்றிக்கடன் பட்டிருக்கிறேன். ஸ்ரீ பகவத் ஐயா அவர்களே ஆண்டவன்போல் என் வாழ்க்கைக்கு உறுதுணையாக இருந்து மிகப்பெரிய அளவில் வளர்ச்சி அடைய வழி செய்வார் என்பது உண்மை. என்றும் நன்றியுடன்.

திரு. **K. திருஞானம்**,
வேப்பம்பட்டு. செல் : 63749 22482

# ஜென் கதை

## "இருப்பது ஒன்றே"

முக்தி நிலையை அடைவதையே தன் வாழ்வின் லட்சியமாக கொண்டு தீவிரமான தேடுதலுடன் இருந்து வந்தான் ஒரு சாதகன். வேத சாஸ்திரங்களை கற்றுத் தேர்ந்தான். ஆனாலும் வேதத்தில் கூறியபடியோ ஞானிகள் பலருக்கு ஏற்பட்ட முக்தி நிலையின் அனுபவமோ அவனுக்கு ஏற்படவில்லை. எப்படியாவது முக்தி நிலையை அடைந்துவிட வேண்டும் என்று ஒரு வாழும் ஞானியை சந்திக்க புறப்பட்டான் சாதகன்.

பனிக்கட்டி உருகி ஓடும் காட்டாற்றின் மறுகரையில் குடில் அமைத்து வாழ்ந்து வந்தார் அந்த ஞானி. ஞானியின் இருப்பிடத்திற்கு செல்வதற்கு சாலைகள் கிடையாது. ஆற்றை கடந்தால் மட்டுமே அவரை சந்திக்க முடியும். வெள்ளம் பெறுக்கெடுத்து ஓடும் ஆறு அது. அதை கடக்க வாய்ப்பே இல்லை. மீறி ஆற்றில் இறங்கினால் உயிருக்கு உத்திரவாதம் இல்லை. அவரின் இருப்பிடத்தை அடைய மிகப்பெரிய மலையை கடக்க வேண்டும். அதற்கு பத்து நாட்கள் கடினமான பயணத்தை மேற்கொள்ள வேண்டும். பிறகுதான் அந்தக் கரையில் வசிக்கும் அந்த ஞானியை சந்திக்க முடியும்.

தினமும் ஆற்றின் இந்தக் கரையில் இருந்து கொண்டு மறுகரையில் இருக்கும் ஞானியை கவனிப்பது ஒன்றையே தன்னுடைய முழு நேர வேலையாக செய்யத் தொடங்கினான் சாதகன். ஞானியின் தினசரி செயல்பாடுகளை காலை எழுந்தது முதல் இரவு படுக்கும் வரை நடக்கும் அத்தனை நிகழ்வுகளும் இவனுக்கு அத்துப்படி. அதனால் அவரை காண வேண்டும் என்ற ஆர்வம் ஏற்பட்டது. பத்து நாட்கள் கடுமையான ஆபத்துகள் நிறைந்த காட்டுப் பயணத்தையும் கடந்து ஞானியின் இருப்பிடித்தை சென்றடைந்தான் சாதகன்.

ஞானியை பார்த்தவுடன் அவரின் பாதங்களில் விழுந்து வணங்கி தன்னுடைய நிலையை எடுத்துக்கூறி, தான் எதிர் கரையில் இருந்து கொண்டு உங்களை பல நாட்கள் கவனித்து வருவதாக கூறி மகிழ்ந்தான். உங்களையே மானசீக குருவாக ஏற்றுக் கொண்டு பின் தொடர்வதாக கூறினான். நீங்கள்தான் எனக்கு எப்படியாவது முக்திக்கு வழி காட்ட வேண்டும் என்று அவரை வேண்டிக் கேட்டுக் கொண்டான்.

ஞானி, அவனை ஊடுருவி பார்த்து புன்னகைத்துவிட்டு "நீ எங்கிருந்து என்னை கவனித்தாய்?" என்று கேட்டார். தினமும் ஆற்றின் எதிர் கரையில் இருந்து அவன் பார்க்கும் இடத்தை சுட்டி காண்பித்து "நான் தினமும் உங்களை அந்த மரத்தின் கீழ் இருந்து தான் கவனிப்பேன்." என அவனது தினசரி நடவடிக்கைகளை எல்லாம் ஞானியிடம் கொட்டித் தீர்த்தான்.

ஓடிக்கொண்டிக்கும் ஆற்றை காட்டி "இது என்ன?" என்றார் ஞானி. அவன் "காட்டாறு" என்றான். மேலும் "ஆற்றின் இரண்டு புறமும் என்ன இருக்கிறது?" என்றார் ஞானி.

"ஆற்றின் இரண்டு புறமும் கரைகள் இருக்கிறது சுவாமி" என்றான் சாதகன்.

"அப்படித்தானப்பா நீயும் நானும்" என்றார் ஞானி.

"சுவாமி ஒன்றும் புரியவில்லை" என்றான் சாதகன்.

அவன் மறு கரையில் இருந்து ஞானியை தினமும் சந்திக்கும் இடத்தையும் இப்பொழுது அவன் நின்று கொண்டிருக்கும் ஆற்றின் இந்த கரையையும் காண்பித்து, "நீ அந்த கரையில் இருக்கிறாய், நான் இந்தக்கரையில் இருக்கிறேன். அவ்வளவுதான் வித்தியாசம், மற்றபடி எல்லாம் ஒன்றுதான்" என்றார் ஞானி.

மேலும் "இதில் இந்தக்கரை உயர்ந்தது, அந்தக் கரை தாழ்ந்தது என்று எதுவும் இல்லை. நாம் இருக்கும் இடமே முக்கி தான். **இருப்பதை மறுதலிக்கும் மனோபாவமே முக்திக்கு விரோதமானது. முக்திக்காக எங்கும் அலையத் தேவையில்லை**" என்றார் ஞானி.

பெரிய பனிமலைகள் கதிரவனின் கதிர்கள் பட்டவுடன் எப்படி கரைந்து தண்ணீராக ஓடத் தொடங்குகிறதோ, அப்படி சாதகன் மனதில் இதுவரை முக்தியை பற்றி சேகரித்த பல கருத்துக்கள், பல ஞானிகளின் அனுபவ நிலைகள், இப்படித்தான் இருக்கும் என அவன் வைத்திருந்த அனைத்து கற்பனைகளும் ஒட்டுமொத்தமாக கரைந்து ஓட தொடங்கியது. **மறுகரையில் நீ இருக்கிறாய் அவ்வளவு தான் வித்யாசம்** என்ற வார்த்தை இடையறாது அவன் காதுகளில் ஒழித்துக்கொண்டே இருந்தது.

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698
Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020 Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555